இவை "உண்டற் குரிய வல்லாப் பொருளை"* என்னுஞ் சூத்திரத்தில் உய்த்துக்கொண் டுணர்த லென்பதனாற் கொண்டாம்.

இவை மூன்றுந் தாழிசை.

(கச) **எனவாங்கு:—**

அசை.

இது தனிச்சொல்.

(கடு - கக) **யானுநின்...........கோணமே:—**

(இ - ள்.) நின்னிடத்து யானும் பயன்படாத தன்மையை யுடையேன்; இனிக் கொலைத்தொழிலிடத்துக் கடிய கோட்பாட்டோடே நாய் அமையாமற் சென்று தனக்கு உரித்தென்று அகப்படுத்திக் கொள்ள அதற்கு உரித்தாகாது வலைவர்க்கு அமர்ந்துவிட்ட மடமான் போலே எனக்கு உரித்தாக யான் அகப்படுப்பவும் என்னுங்கு வாராமல் நின்னுங்கு வரும் என் நெஞ்சினைப் பாதுகாத்துக்கொள்.

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்கு இழிவுந் தலைவற்கு அசைவும் பிறந்தன.

'நின்னுங்கு' 'என்னுங்கு' என்பன நின்னுடைய கையிடத்து என்னுடைய கையிடத்து எனச் சுட்டுப்பொருள் தந்தவா றுணர்க.

இஃது 'இனியான்' எனத் தனிச்சொல்லும் ஓரடியான் ஒன்றும் பெற்றுவந்த கொச்சகம். இது "பாநிலை வகை"† என்னுஞ் சூத்திர விதி. (உஉ)

உச

நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தாம்
அஞ்சிய தாங்கே அணங்காகு மென்னுஞ்சொல்
இன்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானும்
இதுவொன் றுடைத்தென எண்ணி அதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றேட் கனவுவார் ஆய்கோல்
தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
விடுமருப் பியானை இலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்றெஞ்
செய்பொருண் முற்று மளவென்று ராயிழாய்

* தொல். பொருள்: உகக. † தொல்- பொருள்: சகூஎ.

தாமிடை கொண்ட ததுவாயின் தம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயின்
கரு. தோய்யில் துறந்தா ரவரெனத் தம்வயின்
நோய்யார் நவலும் பழிநிற்பத் தம்மோடு
போயின்று சொல்லென் னுயிர்.

இது தலைமகன் குறிப்புக்கண்டு பிரிவனென ஐயுற்றுச் செல்கின்ற தலைவி அக்காலத்துத் தலைவன் கனவின் அரற்றினமை கேட்டுப் பொருள்வயிற் பிரிகின்றா னெனத் துணிந்து ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது.

இது "மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே"* என்பதனால் அந்தணன் அறங் கருதித் தூதிற் பிரிந்து அவ்வரசர் செய்த பூசனை வாங்கிக்கொண்டு வருதற்குப் பிரிகின்றதென்று கொள்க. இது "வேற்றுநாட் டகல்வயின் விழுமங்"† கூறுகின்றது.

(இ - ள்.) இன்றீங்கிளவியை யுடையாய்! நெஞ்சு நடுக்கமுறும் படி பலகாலுங் கேட்டுங், கேட்ட அதனை உண்டோ இல்லையோ வென்று ஐயுற்றுந், தாம் அஞ்சியிருந்த பொருள் தாங் கேட்டபடியிலே மெய்யாய் வருத்தமாமெனும் பழமொழி அறுதியாக உண்மை; அஃது எங்ஙனே யென்னில், நின்னுடைய உறவானவர், பல நாளும் புதிய தொன்றாக என்னைப் பாராட்டுகையினாலே யானும் இப்பாராட்டுதல் ஒரு பிரிவையுடைத்தென்று கருதி அப்பிரிவை ஆராயா நிற்க, ஐந்து வகையாகக்‡ கூட்டின மாசில்லாத வண்மையையுடைய படுக்கையிற் புணர்ந்த புணர்ச்சியிடத்தே என் தோளிலே துயில்கொண்டு கனாக் காண்கின்றவர், "ஆராய்ந்த கோற்றொழிலையுடைய செறிந்த தொடி யணிந்த முன் கையினையுடையாள் கையாறு கொள்ளாளாய்க், குத்துங் கொம்பினையுடைய யானை நீர் வேட்கையினாலே விளங்குகின்ற பேய்த் தேரின் பொருட்டு ஓடும் நெடுமலையில் வெய்ய சுரத்தைப் போய் இரு பெரு வேந்தரையுஞ் சந்து செய்வித்தற்கு நடுவாக நின்று சந்து செய் வித்த பின்னர் யாம் பெறுதற்கு உரியவாய் அவர் எமக்குச் செய்யும் பூசனையாகிய பொருள் அவர் தந்து முடியுமளவுந், தனக்கு வரைவினை யுடைய இல்லறத்தையுங் காத்துச் செந்தீயையும் பாதுகாக்க வல்லளோ!" வென்று கூறினர்; ஆய்ந்த இழையினையுடையாய்! நங் காதலர் கூட்டத்திற்கு இடையீடாகக் கொண்ட காரியம் பொருள் வயிற் பிரிவாயின், யாந் தம்மைப் பிரிந்து உயிர் வாழும் வலியிலே மாயின், இனி, "அவள் மார்பிற் றொய்யிலை நீங்காதவர் இப்பொழுது துறந்தார்" ரென்று நொய்ய மகளிர் கூறும் பழி தம்மிடத்தே நிற்ப, என்னுயிர் தம்மோடே கூடப் போயிற்றென்று சொல்.

---

* தொல். பொருள்: உக. † தொல். பொருள் கசசூ.

‡ கஉ-ம் பக்கம் பார்க்க.

'நெஞ்சு நடுக்குறக்' கேட்டது, "இவ் ஆலிலே பேயுண்" டென்று கேட்டாற்போல்வது. 'இன்கிளவி', பின்பு காரியத்தில் இனிய கிளவி; 'தீங் கிளவி', கேட்ட காலத்தில் இனிய கிளவி.

'கனவுவா' ரென்றது தொடங்கி 'என்ரூ' ரென்ற துணையுங் கன வென்னும் மெய்ப்பாடு. 'கையாறு', உயிர்ப்பின்றி வினையொழிந்தயர் தல். தொய்யில் அவரெனக் கூட்டுக.

'போயின்'றென்ற குற்றுகரம் இன் பெற்று னகரந் திரியாமல் நின்றது. தெளிவுபற்றி இறந்த காலத்தாற் கூறினாள்.

இதனாற் றலைவிக்கு இழிவுந் தோழிக்கு அச்சமும் பிறந்தன.

இது சீருந் தளையுஞ் சிதையாமற் பன்னீரடியின் இகந்து ஒரு பொருணுதலாத சீர்வகைக் கலிவெண்பா　(உ௪)

## உ௫

வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்
ஐவரென் றுலகேத்தும் அரசர்கள் அகத்தராக்
கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா
முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழல்
ஒள்ளுரு வரக்கில்லை வளிமகன் உடைத்துத்தன்
உள்ளத்துக் கிளைகளோ டுயப்போகு வான்போல
எழுவுறழ் தடக்கையின் இனங்காக்கு மெழில்வேழம்
அழுவஞ்சூழ் புகையழல் அதர்பட மிதித்துத்தங்
குழுவோடு புணர்ந்துபோங் குன்றழல் வெஞ்சுரம்
இறத்திரால் ஐயமற் றிவணிலைமை கேட்டீமின்;

மணக்குங்கால் மலரன்ன தகையவாய்ச் சிறிதுநீ
தணக்குங்காற் கலுழ்பானாக் கண்ணெனவு முளவன்றோ
சிறப்புச்செய் துழையராப் புகழ்போற்றி மற்றவர்
புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல்;

ஈங்குநீர் அளிக்குங்கால் இறைசிறந் தொருநாணீர்
நீங்குங்கால் நெகிழ்போகும்[1] வளையெனவும் உளவன்றோ
செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவர்
ஒல்கிடத் துலப்பிலா உணர்விலார் தொடர்புபோல்;

(பாடம்) 1. நெகிழ் பேகும்.

ஒருநாணீ ரளிக்குங்கால் ஒளிசிறந் தோருநாணீர்
பாராட்டாக் காற்பசக்கு நுதலேனவு முளவன்றே!
பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை
பிரிந்தக்காற் பிறர்க்குரைக்கும் பீடிலார் தொடர்புபோல்;

உ௫. எனவாங்கு,
யாநிற் கூறுவ தேவனுண் டெம்மினும்
நீநற் கறிந்தனை நெடுந்தகை வானந்
துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின்
அளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே.

இது பிரிவுணர்த்தப்பட்ட தோழி நீ பிரிந்தாற் பீடிலார் தொடர்புபோல நும்மை அலர் தூற்றுவன இவ்வகைப்பட்டன சிலவுள வெனத் தலைவி யாற்றாமை கூறிச் செலவழுங்குவித்தது.

(க - கஉ) வயக்குறு.........கேட்டீமின்:—

(இ - ள்.) வடமொழிப் பெயர்பெற்ற வயக்குறுமண்டிலம் போலும் முகத்தவனுடைய மக்களுள் மூத்த துரியோதனன் சூழ்ச்சியாலே, ஐவரென்று உலகத்தார் புகழுந் தன்மபுத்திரர் முதலியோர் உள்ளேயாகக், கையாலே புனையப்பட்ட அரக்குமாளிகையை விரைந்து நெருப்புச் சூழ்ந்தாற்போலக், களிப்பு விளங்குகின்ற மதத்தவாகிய கடிய களிறுகள் உள்ளேயாக, உலர்ந்த மூங்கிலையுடைய உயர்ந்த மலையைச் சூழ்ந்த முழங்குகின்ற அழலைக், கணையத்தை மாறுபடுகின்ற[2] தடக்கையினையுடைய தன் இனத்தைக்காக்கும் அழகினையுடைய வேழம், புகையழலை யுடைத்தாகிய ஒள்ளிய உருவத்தினையுடைய அவ்வரக்கில்லை அந்த வீமசேனன் அழித்துத் தன் உள்ளத்திற்குப் பொருந்தின சுற்றத்தோடே பிழைக்கப்போகின்றவனைப்போல, அதர் படும்படி மிதித்துத் தம்முடைய திரளோடே கூடிப் போதுங் காட்டுப் பரப்புச்சூழ்ந்த குன்று அழலும் வெய்தாகிய சுரத்தை இறப்பீராயின், ஐயனே! பின்னை இவளுடைய நிலைமையைக் கேட்பீராக!

வடமொழிப் பெயர்பெற்ற வயக்குறுமண்டிலம் போலும் முகத்தவனென்றது, ஆதித்தரிற் பகனென்னும் வடமொழிப் பெயரைப் பெற்ற விளங்குதலுறும் ஆதித்தனைப்போலும் முகத்தையுடையவ னென்பது; அவன் தான் குருடாயினமையிற் பிறரைக் காணுதவாறுபோல இவனும் பிறரைக் காணுத முகத்தையுடையவனென்றவாறு; என்றது திருதராட்டிரனை. இனி, விளக்கமுற்ற கண்ணுடியின் பெயரை வடசொல்லாகிய பெயராற் பெற்ற முகத்தவன் என்றலுமாம்; அது தர்ப்பணனனனென்னும் பெயரை. அது

(பாடம்) 1. உளதன்றே. 2. மாறுபடுக்கின்ற.

பிறரைத் தான் காணுதவாறுபோல இவனும் பிறரைக் காணு னென்ற தாம். இனி, விளக்கமுற்ற நாடென நின்ற அச் சொல்லினைத் திருத ராட்டிர னென்னும் வடமொழிப்பெயராலே தமிழ்ச்சொலீருகத் திரித்த ததராய னென்னும் பெயர்பெற்ற பாண்டுவுக்கு மூத்தவ னென்றும் உரைப்ப.

முற்றிய முழங் கழலை, இனங் காக்கும் வேழம், புகையழலை யுடைய அவ்வரக்கில்லை அவ்வளிமகன் உடைத்துக் கிளைகளோடே போவான் போல, அதர்பட மிதித்துக் குழுவொடு புணர்ந்து போஞ் சுர மென்க. அழலை மிதித்துப் போமென முடிந்தது. அழுவஞ் சூழ் குன்று அழல்சுர மென்க. இது சுரத்திற்கு அடை.

'ஐய கேண்மி' னென்பது ஒருமைப்பன்மை மயக்கம். ஆயில், ஆலென விகாரமாயிற்று.

இது தரவு.

(கஙு - கசு) மணக்துங்கான்.........தோடர்புபோல்:—

(இ - ள்.) தம்மிடத்தே இருந்தாராக அவர்களுக்குச் சிறப்புக் களைச்செய்து புகழ்ந்துவாழ்த்தி அவர் எழுந்த அளவிலே அவர்க் குள்ள பழிகளைப் பலர்க்குங் கூறும் புறங்கூறுவாருடைய உறவுபோல நீர் கூடியிருக்குங்காலத்துச் செவ்வியைத் தோற்றுவித்து மலரை யொத்த தகைமையினையுடையவாய்ச் சிறிதுபொழுது நீர் பிரியுங் காலத்து நும்பழியைத் தூற்றி அழுதலமையாத கண்ணெனவுஞ் சில பகை உளவன்றே?

அப்பகையை பேணுங் கண்ணெனவு மென்றது, "கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை"* எனப்பட்டும் பகையா மென்னுங்[1] குறிப்பிற்று.

கள - உ0) ஈந்த நீ.........தோடர்புபோல்:—

(இ - ள்.) ஒருவர்க்குச் செல்வமுண்டான இடத்து நீங்காதிருந்து அவருடைய செல்வத்தை நுகர்ந்து பின்னை அவர் மிடித்த காலத்து அவர்க்கு ஒன்றை உதவுதலில்லாத அறிவில்லாதாருடைய† உறவு போலே நீர் இவ்விடத்தே கூடியிருந்து அருள்செய்யுங் காலத்து இவட்கு உண்டாகிய அழகைத் தானும் பெற்று இறையிலே சிறந்து காட்டி ஒருநாள் நீர் பிரியுங் காலத்துத் தோள்மெலிகையினுலே தான் உதவி செய்யாது கழன்றுபோம் வளையெனவுஞ் சில பகைஉள வன்றே?

அப்பகையைப் பேணும் வளையெனவு மென்றது சிறந்து அழகு தருமாயினும் பகையாயிற் றென்னும் குறிப்பிற்று.

* நான்மணி. ௫சு. † அகம். எக : கஉகூ௩ - ஆம் குறளுரை.
(பாடம்) 1. பகையா யிருக்கு மென்னுங்.

(உக - ) ஒருநாணீ............தொடர்புபோல் :—

(இ - ள்.) இருவர் மனமும் பொருந்திய நட்பாலே அவன் கூறிய மறைப்பொருளை அறிந்து அம்மறைப்பொருளை அவன் நீங்கினாற் பிறர்க்கு இருந்து சொல்லும் பெருமையில்லாதார் உறவுபோலே, ஒரு நாள் நீர் அளிசெய்யுங் காலத்து நும் அளிக்குத் தானுங் கூடினாற் போன்று ஒளிமிக்கு, ஒருநாள் நீர் அளியாக்காலத்து நும்முடைய குணத்தைப் பிறர்க்கு அறிவித்துப் பசந்து காட்டும் நுதலெனவும் ஒரு பகை உண்டன்றோ ?

அப்பகையைப் பேணும் நுதலெனவுமென்றது, சிறப்புறுப்பாய் அழகுகொடுத்தற்கு உரியது பகையாயிற்றென்னுங் குறிப்பிற்று. மெய்யெல்லாங் கோலஞ்செய்தாலும் நுதற்குத் திலகம் முதலியன நீட்டாக்கால் அவை கோலமாய்த் தோன்றாத தன்மை நுதற்கு உள தாகலிற் சிறப்புறுப்பாயிற்று.

இவை மூன்றுந் தாழிசை.

(உடு) எனவாங்கு :—

(இ - ள்.) என்று ; 'ஆங்கு' : அசை.

இது தனிச்சொல்.

(உசு - உக) யாநிற்கவினே :—

(இ - ள்.) யாம் நினக்குக் கூறுகின்ற வார்த்தையால் என்ன பயன் உண்டு? எம்மினுங் காட்டில் அப்பகை யுண்மையை நீ நன்றாக அறிந் தாய் ; அதுவுமின்றி, நெடுந்தகாய்! இந்த ஆராய்ந்த இழையினையுடை யாள் அழகு நீ அளித்தலை நீங்குங் காலத்து இவ்விடத்து, வானந் துளி மாறு பொழுது இவ்வுலகங் கெடுமாறுபோலக்* கெடுங்காண் ; அதனை உட்கொள்ளாய்.

இது சுரிதகம்.

இதனாற் றோழிக்கு இழிவுந் தலைவற்கு அசைவும் பிறந்தன.

இது பெருமைக்கெல்லை கூறிய பன்னீரடித் தரவும் நான்கடித் தாழிசையுந் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தா ழிசைக் கலிப்பா. (உச)

உசு

ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியு
மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியு
மேனோன்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலும்

---

* குறள். டுடுஎ.

ஆனேற்றுக் கொடியோன்போல் எதிரிய இலவமுமாங்கத்[1]
தீதுதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோலப்
போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக ;

பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் தொலைந்தவென் தடமென்றோள் உள்ளுவார்
ஒல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர் ;

திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த என்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நிழல்[2] சேர்ந்தாரைத் தாங்கித்தம்
இசைபரந் துலகேத்த ஏதில்நாட் டுறைபவர் ;

அறல்சாஅய் பொழுதோடெம் அணிநுதல் வேறுகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவார்
ஊறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
ஆறின்றிப் பொருள்வெஃகி அகன்றநாட் டுறைபவர் ;

என நீ,

தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே.

இது "மேவிய சிறப்பி னேனோர்"* என்னுஞ் சூத்திரத்திற் பகைமேற் சென்ற அரசன் திறை பெற்ற நாடு காத்து அதன்கண் தன் நெறி முறைமை அடிப்படுத்துவதற்குப்[3] பிரிவ னென்றலின், பிரிவின்கண் தலைவன் இளவேனிற் காலத்துப்[4] பிரிய, அக்காலவரவின்கண் தலைவி ஆற்றாளாய் அவர் நமக்கு அருளுங் காலையில் அருளார்காணென்றாட்குத், தோழி, அவர் வரவிற்கு இக்காலந் தூதாயன்றே வந்தது, நீ ஆற்றுவாயாக வென வற்புறுத்தியது.

(க - அ) ஒருதழை ...........மேதக :—

(இ - ள்.) நீர் பொருகின்ற கரையினிற்கும் ஒரு பூங்குழையை யுடைய நம்பி மூத்தபிரானைப்போலப் பூங்கொத்துக்கள் பொருந்தின

---

* தொல். பொருள் : உஅ.

(பாடம்) 1. ஆங்குத். 2. தந்நீழல். 3. படுத்து வருதற்குப். 4. காலங் குறித்துப்.

வெண் கடம்பும், பருதியாகிய அழகிய செல்வனைப்போல அரும்புகள் அலர்ந்த செருந்தியுஞ், சுறவை யுடைத்தாகிய கொடியினையுடைய காமனைப்போல மிஞிறுகள் ஆரவாரித்தற் கிடமாகிய காஞ்சியும், அவன் தம்பி சாமனைப்போல நிறம் விளங்கிப் பூக்கள் நெருங்கின ஞாழலும், இடபத்தினையுடைய கொடியினையுடைய இறைவனைப்போலப் பூக்கள் காலத்தை எதிர்கொண்ட இலவமுந், தமக்குக் குற்றந் தீர்ந்த தலைமையினையுடைய ஐவர்களுடைய நிறத்தின் றன்மைபோல, அக்கரையிடத்துப் பூக்கள் விரிந்த பிற மரங்களோடே அழகு பெறப், பிரிந்தார்க்கு நோவு பொருந்தக், கூடியிருந்தார்க்குப் பெருமை பொருந்த இளவேனில் வந்துற்றது ;

'மீனிலேறு,' 'ஆனிலேறு,' 'மிஞிறூர்க்குங் காஞ்சி': இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேலே நின்றது. 'ஏனோன்'. ஏனையோனின் விகாரம். 'ஆங்' கென்றது அக்கரையை. கரை மராமுஞ் செருந்தியுங் காஞ்சியும் ஞாழலும் இலவமும் பிற மரங்களோடே கவின் பெறவென இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்துமேல் ஏற்றலுமொன்று

இது தரவு.

(கூ - கஉ) பல்வரி...........டுறைபவர் :—

(இ - ள்.) இயற்கை நலங் கெட்ட என்னுடைய பெருமையையுடைய மெல்லிய தோளைப், பல வரியினையுடைய இனமாகிய வண்டுகள் புதிதாகிய தேனை நுகரும் இளவேனிற்காலத்தே, கூட நினைப்பார் முன்னர் அந்நாடு ஆள்பவர் கலக்கமுறுத்த அலைபெற்றுப், பின் தன்னை நிழலாக அடைந்த குடிமக்களுக்கு நெஞ்சு வருந்தாதபடி பகைவரைப் பேணிக் காத்து, முன்பு நாடாட்சி பெற்ற பகைவரை வென்ற புகழை உலகத்தார் புகழப் புதுமையையுடைய நாட்டிலே இருக்கின்றவர் ;*

என்றதனால், திறைபெற்ற நாட்டைத் திருத்தித் தன் நாடு போல நெறி முறைமை நடத்துவித்தலே பொருளென்று இருக்கின்றவர் நம்மை நினையார்கா ணென்று நிகழ்ந்தது கூறினாள். 'விருந்து நாடெனவே பகைவர் தோற்றுத் திறை கொடுத்தமை தோன்றிற்று.

'உள்ளுவா'ரெனு முற்றுவினை பெயர்கொண்டு நின்றது ; காத்துறைபவ ரென்க.

(கங - கசு) திசைதிசை...........டுறைபவர் :—

(இ - ள்.) குற்றமற்ற என் நலங் கெடுவதற்குத் திசைதோறுந் திசைதோறுந் தேனினம் ஆரவாரிக்குந் திருமருதந் துறைமுன்னே அருளுதலைச் செய்வார், நம்மைக் காத்தற்குரியான் இவனென்று நச்சுதல்கொண்டு தம்மை நிழலாக வந்தடைந்த குடிமக்களைத் தமக்குப் பார

* புறப். வெண். வஞ்சி : எ.

மென்று பொறுத்துத் தம் புகழ் உலகெங்கும் பரக்கையினாலே அவ்வுலகத்தார் புகழத் தமக்கயலாகிய நாட்டிலே இருக்கின்றவர்;

"யாறுங் குளனுங் காவு மாடிப் - பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப"* என்பதனால், திருமருதந்துறையில் அருளுவா ரென்றாள்.

(கஎ - உ0) **அறல்சாஅய்............டுறைபவர் :—**

(இ - ள்.) எம்முடைய அழகினையுடைய நுதலும் பசந்து, நாமும் வலியமைந்த[1] பெரிய அழகை இழப்பதற்கு நீரற்று ஓடுதல் சுருங்கின இளவேனிற் காலத்தே அருளுதலைச் செய்வார், முன்பு நாடாட்சி பெற்ற அரசர் செய்த வருத்தத்திற்கு அஞ்சி நிழலாக வந்தடைந்தார்க்கு நெஞ்சு வருந்தாதபடி பகைவரைப் பேணிக் காத்து, நெறியன்றி அவ்வரசர் பொருளை விரும்புகையினாலே, அவரை நீங்கின நாட்டிலே இருக்கின்றவர்;

இவை மூன்றுந் தாழிசை.

(உக - உரு) **எனநீ............தூதே :—**

(இ - ள்.) என்று கூறி மனஞ் சுழலாதே கொள்; அதற்குக் காரணம் யாதெனில், நங் காதலர் பொருகின்ற மாறுபாட்டையுடைய யானையை யுடையவராய்ப் போர்செய்தற்கு மாறுபட்டு எதிர்வந்தவருடைய போரிடத்தே நீ கூறியவாறே மேலான நாடுகளைப் பெற்ற வெற்றியையுடைய ராகையினாலே அவருடைய மெய்ம்மொழியாகிய தூது வருவரென்று சொல்லி வந்ததுகாண்; இனித், தோழி! நீ இனிது வாழ்வாயாக!

'மேம்பட்ட' ஈண்டுப் பெயராய் நின்றது. வரவென வந்தன்று என்று பாடமாயின், வெற்றியையுடைய ராகையினாலே அவர் மெய்ம்மொழியாகிய தூது வந்ததென்று சொல்லிவந்த தென்க.

'எனநீ' தனிச்சொல்; எஞ்சியது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இது தரவின்கண் ஐஞ்சீரடி வருதலிற் கொச்சகமாய்க் கலிவெண்பாட்டின் வேறாயிற்று. (உரு)

## உஎ

ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போல் தீங்கரை மரநந்தப்
பேதுறு மடமொழிப் பிணையெழின் மானோக்கின்
மாதரார் முறுவல்போல் மணமௌவல் முகையூழ்ப்பக்

* தொல். பொருள்: ககக.

(பாடம்) 1. வலிமை யமைந்த.

காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போற் கழல்குபு
தாதோடுந் தளிரோடுந் தண்ணறல் தகைபெறப்
பேதையோன் வினைவாங்கப்* பீடிலா அரசனுட்
டேதிலான் படைபோல இறுத்தந்த திளவேனில்;

நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த அணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பானுக் கூடலும் உள்ளார்கொல்;

கன்மிசை மயிலாலக் கறங்கியூர் அலர்தூற்றத்
தொன்னலம் நனிசாய நம்மையோ மறந்தைக்க
ஒன்னுதார்க் கடந்தடூஉம் உரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்;

மையெழின் மலருண்கண் மருவூட்டி மகிழ்கொள்ளப்
பொய்யினுற் புரிவுண்ட நம்மையோ மறந்தைக்க
தைஇய மகளிர்தம் ஆயமோ டமர்ந்தாடும்
வையைவார் உயரெக்கர் நுகர்ச்சியும் உள்ளார்கொல்;

எனவாங்கு,

நோய்மலி நெஞ்சமோ டினையல் தோழி
நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயின்
காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதென
ஏமுறு கடுந்திண்டேர் கடவி
நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே

*இது தலைவன் குறித்துப் பிரிந்த இளவேனில் வரவின்கண் எம்மையோ மறக்க, இக்காலத்து இவ்வூரின்கட் டாம் விளையாடும் விளையாட்டும் மறந்தாரோ வெனச்சொல்லி ஆற்றாளாய தலைவிக்குத் தோழி தலைவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.*

(க - அ) **ஈதலிற்…………திளவேனில் :—**

(இ - ள்.) *கொடுத்தற் றொழிலிடத்துப் பொருட்குறை காட்டாமற் கொடுத்து இல்லறம் நிகழ்த்தும் முறைமையை அறிந்து நிகழ்த்திய தீவினையில்லாதவனுடைய செல்வம் மிகுமாறு போல, இனிதாகிய நீரையுடைய ஆற்றங் கரையில் மரங்கள் தழைக்கக், கேட்டோர் மயக்கம் உறுதற்குக் காரணமான மடமொழியினையும் மான் பிணை*

* கலி. அ : க.

யினது அழகையுடைய நோக்குப்போலும் நோக்கினையுமுடைய காதலையுடைய மகளிருடைய எயிறுபோல மணத்தையுடைய மௌவலின் முகை அலரத், தண்ணிதாகிய அறுதியையுடைய மணல் கழன்று வீழ்ந்த தாதாலுந் தளிராலுங் காதலரைக் கூடினவருடைய மயிர்போல அழகு பெற, இளவேனிற் காலம், அறிவில்லாத அமைச்சன் காரியத்தைப் புலப்படுத்தப் படைவலி இல்லாத அரசனது நாட்டிலே பகையரசன் படை வந்துவிடுமாறு போலத், தங்குதலைச் செய்தது ;

ஊழ்ப்பத் தகைபெற இளவேனில் இறுத்தந்த தென்க. 'காட்டா தென்பதற்குக் கொடுத்தென்றுங் 'கழல்குபு' வென்பதற்கு வீழ்ந்த வென்றும் வினை வருவிக்க.

இது தரவு.

(கூ - கஉ) நிலம்பூத்த............முள்ளார்கோல்:—

(இ - ள்.) நிலம் பொலிவு பெறுதற்கு ஏதுவாகிய மரத்தின் மேலே யிருந்து காலங் கண்டு ஏக்கழுத்தஞ் செய்து[1] ஆரவாரிக்குங் குயில்கள் நம்மை யிகழும்படியாக, நன்மை பொலிவு பெற்ற நமது நிறங் கெடும்படியாகத் தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக; தாம் அணிந்த கலங்கள் பொலிவு பெறுதற்குக் காரணமான அழகினையுடைய பரத்தையருடைய அழகு தம் மனத்தை மகிழ்ச்சியைச் செய்கையினாலே தம் அறிவு பொலிவு பெற்று அவரைப் புகழ்தல் அமையாத கூடலையும் நினையாரோ? நினைக்கில் வருவரன்றோ?

பெயரெச்சத்திற்குக் காரணம் வருதல் கருவிக்கண் அடங்கும். 'மறந்தைக்க,' வியங்கோட் டிரிசொல்.

(கங - கசு) கன்மிசை............விரும்பார்கோல்:—

(இ - ள்.) நஞ் சாயல் கெட்டமை கண்டு மலைமேலே மயில் ஆரவாரித்து ஆடும்படியாக, ஊரிலுள்ளார் ஆரவாரித்து அலர் தூற்றும்படியாக, நம்முடைய இயற்கை நலமும் மிகக் கெடும்படியாகத் தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக; பகைவரை மாயஞ் செய்து கொல்லாது வென்று கொல்லும் பரக்குங் கடலிடத்து எய்தாநின்ற மாமரத்தைத் தடிந்த வென்வேலையுடைய[2] முருகன் திருப்பரங்குன்றின் மேற் பரத்தையருடன் விளையாடும் விளையாட்டையும் விரும்பாரோ? விரும்பில் வருவரன்றோ?

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளு - மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும் - வந்த நிலத்தின் பயத்த வாகும்"* என்ற விதிபற்றிக்

---

* தொல். பொருள்: கக.

(பாடம்) 1. எக்கழுத்தஞ்செய்து. 2. வென்றி வேலையுடைய.

குறிஞ்சிக்குப் பயின்ற மயில் பாலைக்கண் இளவேனிற் காலத்து வருதலிற் பொழுதொடு புள்ளும் மயங்கிற்று.

(கஎ - உ0) மையெழின்...........முள்ளார்கோல் :—

(இ - ள்.) எம்மை மயலாக்கிக் கருமையுடைத்தாகிய அழகினையுடைய நீலமலர்போலும் மையுண்கண்ணை மகிழ்ச்சி கொள்ளும்படி தம்மோடே மருவுதலூட்டித் தாம் செய்த பொய்யாலே மனந் தம்மிடத்திலே புரிதலைச் செய்த தாம் விரும்பாத நம்மையோ மறப்பாராக; கோலஞ் செய்தலையுடைய பரத்தையர் தம்முடைய திரளோடே மனம் பொருந்தி விளையாடும் வையையாற்றிடத்து நீண்ட உயர்ந்த இடுமணலிடத்து நுகர்ச்சியையும் நினையாரோ? நினைக்கில் வருவரன்றோ?

மருவுதலூட்டி யென்றார் அக்கண்ணிடத்து நாவாற் செய்யுந் தொழிலை. மருவூட்டிச் செய்தவென ஒரு சொல் வருவிக்க.

இவை மூன்றுந் தாழிசை.

(உக) எனவாங்கு :—

(இ - ள்.) என்று கூறி; 'ஆங்கு': அசை.

இது தனிச்சொல்.

(உஉ - உசு) நோய்மலி...........விரைந்தே :—

(இ - ள்.) நோய்மிக்க நெஞ்சோடே வருந்தாதேகொள்; தோழி! நாம் அமர்ந்த காதலர் தனிமையாயின், நாமில்லாத தனிமையாயிருந்தது; காலமாயிற், பிரிந்தார்க்கு நடுக்கஞ்செய்யும் இளவேனிற் காலமாயிருந்தது; ஊரிலுள்ளார் கொண்டாடும் விழவாயிற், காமவேளுக்குச் செய்யும் விழவாயிருந்தது; ஆதலாற் பெரிதுங் கலங்குவளென்று கருதிப் பகைவர் மயக்கம் உறுதற்குக் காரணமான கடிய திண்ணிய தேரை விரைந்து செலுத்தித் தார் துணையாந் தன்மையை நமக்குத் தந்தார்காண்!

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இஃது எட்டடித்தரவும் நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும் ஐயடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உசு)

## உஅ

பாடல்சால் சிறப்பிற் சினையவுஞ் சுனையவும்
நாடினர் கோயல்வேண்டா நயந்துதாங் கொடுப்பபோல்
தோடவிழ் கமழ்கண்ணி தையுபு புனைவார்கண்
தோடுறத் தாழ்ந்து துறைதுறை கவின்பெறச்

செய்யவ ளணியகலத் தாரமோ டணிகோள்பு
தோய்யகந் தாழ்ந்த கதுப்புப்போல் துவர்மணல்
வையைவார் அவிரற லிடைபோழும் பொழுதினன்;

விரிந்தானு மலராயின் விளித்தாலுங் குயிலாயின்
பிரிந்துள்ளா ரவராயின் பேதுறூஉம் பொழுதாயின்
அரும்படர் அவலநோய் ஆற்றுவ ளென்னாது
வருந்தநோய் மிகுமாயின் வணங்கிறை அளியென்னோ;

புதலவை மலராயின் பொங்கரின வண்டாயின்
அயலதை யலராயின் அகன்றுள்ளா ரவராயின்
மதலையில் நெஞ்சொடு மதனில ளென்னாது
நுதலூரும் பசப்பாயின் நுணங்கிறை யளியென்னோ;

தோயின அறலாயின் சுரும்பார்க்குஞ் சினையாயின்
மாவின தளிராயின் மறந்துள்ளா ரவராயின்
பூவெழி லிழந்தகண் புலம்புகொண் டமையாது
பாயனோய் மிகுமாயின் பைந்தொடி அளியென்னோ;

எனவாங்கு,
ஆயிழாய் ஆங்கன முரையாதி சேயார்க்கு
நாந்தூது மொழிந்தனம் விடல்வேண்டா நம்மினுந்
தாம்பிரிந் துறைதல் ஆற்றலர்
பரிந்தேவன் செய்தி வருகுவர் விரைந்தே.

இஃது இளவேனில் வரவின்கண் ஆற்றாத தலைவி தூதுவிடக் கருதத், தோழி, அவர் பிரிந்திருத்தலை நம்மினுந் தாம் வல்லரல்ல ரெனச் சொல்லி வற்புறுத்தியது.

(க - எ) பாடல்சால்.........பொழுதினன் :—

(இ - ள்.) சுனையிடத்துப் பூக்களை ஆராய்ந்து பறித்தலும் வேண்டாவாகிப் பாடுதல் அமைந்த தலைமையினையுடைய பூக்களைக் கொம்புகள் தாங் கொடுக்க வேண்டுமென்று விரும்பியுங் கொடுப்பன போல் இதழ் விரிகின்ற கமழுங் கண்ணியைக் கட்டிச் சூடும் அம் மகளிரிடத்தே திரட்சியுறத் தாழ்ந்து கொடுத்துத் துறைதொறுந் துறைதொறும் மரங்கள் அழகு பெறும்படி, சிவந்த தலைக்கோலந் தங்கின மயிர்போற் சில விடங்கள் சிவப்பையுடைத்தாகிய மணலையுடைய வையையாற்றில் ஒழுகுகின்ற விளக்கத்தையுடைய அறல்மணல் திருமகளுடைய அழகினையுடைய மார்பிடத்து முத்தாரத்தோடே ஒப்புக்கொண்டு நடுவே பிளந்தோடும் பொழுதின்கண்;

கவின்பெற அறல் இடைபோழு மென்றது காரண காரியமாம் பெருகியநீர் வற்றின காலத்து அவை பூத்தலின்.

குறிஞ்சி நிலத்திற் சுனைப் பூக்களைத் தேடிப் பறியாதபடி இக்கரையில்[1] மரங்கள் வேண்டும் பூக்களைக் கொடுத்தன வென்றார்.

'சுனையவு' மென்னும் உம்மையைக் கொய்யலுமென மாறுக; உம்மை, எதிர்மறை. 'சினையவும்' என்னும் உம்மையை நயந்து மென மாறுக; உம்மை, சிறப்பு.

கல்லிடத்து நீர்நிலைக்குச் சுனையென்னும் பெயரே ஆண்டுக் கூறுதலானும், யாற்றங்கரைக்கண் இன்மையானுஞ், சினை தாழ்ந்து கொடுத்தலன்றிச் சுனைதாழ்ந்து கொடுத்தல் இன்மையானும் இதுவே பொருளாம். 'தோடுறத் தாழ்ந்' தென்றதற்குத் திரட்சியுறத் தங்கி யென்றும், 'கவின்பெற' வென்றதற்குக் 'கவின்பெறுநிற்க' வென்றும் பொருள் கூறிற், பெறுநிற்க 'இடைபோழு' மென்றது பிறவினையாதலின் ஆற்றிற்குச் சிறப்புக் கூறிற்றன்றாய் வேறோர் வினையாமாறு முணர்க.

இது தரவு.

(அ - கக) விரிந்தானு.........யளியேன்னே :—

(இ - ள்.) மலர்கள் அலர்ந்து அமையாவாயிற், குயில்கள் தம் பெடையை அழைத்துக் கூவுமாயின், நந் தலைவர் நம்மைப் பிரிந்து நினையாராயின், இளவேனிற் காலம் மயக்கம் உறுத்துமாயின், அரிய நினைவையுடைய அவலத்தைச் செய்யுங் காமநோய்க்கு இவள் ஆற்றுவளென்று கருதாது இவள் இறந்துபடுவளென்று நீ வருந்தும்படி எனக்குக் காமநோய் மிகுமாயின், வணங்கின இறையையுடையாய்! நம்மாட்டு அவர் செய்யும் அளி என்ன பயன் தரும்?

(கஉ - கடு) புதலவை.........யளியேன்னே :—

(இ - ள்.) மலர்கள் சிறு தூற்றினவையாயின்,[2] வண்டுகள் சோலையிடத்தனவாயின், அலர் அயலாரிடத்ததாயின், நந் தலைவர் நம்மைப் பிரிந்து நினையாராயிற், பசப்பு ஒரு பற்றில்லாத நெஞ்சுடனே தானும் வலியளல்லளென்று கருதாதே நுதலிடத்தே பரக்குமாயின், அசைகின்ற இறையினையுடையாய்! நம்மாட்டு அவர் செய்யும் அளி என்ன பயன் தரும்?

(கசு - கக) தோயின.........யளியேன்னே :—

(இ - ள்.) அற்று வருதலையுடைய நீர் மணலிடத்தே செறிந்தனவாயிற், கொம்பிற் பூக்களிலே சுரும்பு ஆரவாரிக்குமாயின், தளிர் மாவிடத் தனவாயின், நந் தலைவர் நம்மை மறந்து நினையாராயிற், பூவினது அழகை இழந்த கண்கள் உறக்கத்தைக்கொண்டு ஆற்றியிரா

(பாடம்) 1. இக்கரையின். 2. சிறுதூற்றிலவையாயின்.

மற் றனிமையால் உண்டான நோய் மிகுமாயிற், பசிய தொடியினை யுடையாய்! நம்மாட்டு அவர் செய்யும் அளி என்ன பயன் தரும்?

ஓகாரங்கள் எதிர்மறையாதலிற் பயன் தராதென நின்றது.

இவை மூன்றுந் தாழிசை.

(உ0) எனவாங்கு :—

(இ - ள்.) என்று ; 'ஆங்கு' அசை.

இது தனிச்சொல்.

(உக - உச) ஆயிழாய்.........விரைந்தே :—

(இ - ள்.) ஆராய்ந்த இழையினையுடையாய்! அங்ஙனம் பயனின்றாக உரையாதேகொள்; சேய் நாட்டில் உறைகின்றவர்க்கு நம் வருத்தத்தைக் கூறினமாய் நாங் தூதுபோக விடவேண்டா ; நம்மினுந் தாம் இக் காலத்துப் பிரிந்திருத்தலை ஆற்றாராய் விரைந்து வருகுவராதலால் வருந்தி என்ன காரியஞ் செய்கின்றாய்?

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்கு இழிவுந் தோழிக்கு அச்சமும் பிறந்தன.

இஃது ஏழடித்தரவும் நான்கடித்தாழிசையும் பொருள் பெற்ற தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (உஎ)

## உகூ

தோல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலின்
அல்லாந்தார் அலவுற ஈன்றவள் கிடக்கைபோற்
பல்பயம் உதவிய பசுமைதீர் அகன்ஞாலம்
புல்லிய புனிறோரீஇப் புதுநலம் ஏர்தர
வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள
இளையவ ரைம்பால்போல் எக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற தளிர்மிசை மாயவள் திதலைபோல்
ஆயிதழ்ப் பன்மலர் ஐயகோங் குறைத்தர
மேதக இளவேனில் இறுத்தந்த பொழுதின்கண் ;
சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் சின்மொழி
நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் நிறைநீவி
வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்;

போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங் கொள்கையைச்
சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மன் கைநீவி
வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணும் இருந்தும்பி
யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை அலைத்தரூஉம் ;

தோடிநிலை நெகிழ்த்தார்கண் தோயுமேன் ஞருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவும்
நெடுநிலாத் திறந்துண்ண[1] நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம் ;

எனவாங்கு,

வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னேக்கா தேகிநம்
அருந்துயர் களைஞர் வந்தனர்
திருந்தெயி றிலங்குநின் தேமொழி படர்ந்தே.

*இது பருவவரவின்கண் ஆற்ருத தலைவியைத் தோழி வற்புறுப்ப, வன்புறை யெதிரழிந்தாட்குத், தோழி, அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.*

(க - கூ) **தோல்லேழில்.........பொழுதின்கண் :—**

(இ - ள்.) *கருப்பந் தங்கிய காலத்துப் பிறக்கும் வேட்கையாகிய நோய் இளமைக்காலத்து அழகைக் கெடுக்கு மளவன்றி மிக வருத் துகையினுலே அதற்கு அலமந்த சுற்றத்தார், பின்னர், அவள் மெய்ந் நோக்காடு கண்டு வருத்த முறும்படி புதல்வனை யீன்றவள், அப்புதல் வனைக்கொண்டு அக்குடியை யெல்லாம் பாதுகாத்துக் கிடந்த கிடக்கை போலத், தன்னிடத்துப் பயிரையுண்டாக்கின உழவர், தனக்கு இடை யில் வந்த நோய்க்கு வருந்திய வருத்தம் நீங்கும்படி, தான் ஈன்ற உணவுகளைக்கொண்டு குடிமக்களையெல்லாம் பாதுகாத்த உலகம், அவள் தன்னைப் புல்லிய ஈன்றணுமை தீர்ந்து புதுநலம் பெற்ருர் போலத், தான் ஈன்ற பசுமை தீர்ந்த புதிய அழகு தோன்ற, வளையினை யுடைய இளையோர் இழைத்த வண்டற் பாவையும் பூவுங் கலந்து கிடந் தாற்போல வார்ந்த மணல் பூக்கள் உதிர்ந்து கிடந்த வடுவைத் தன் னிடத்தே கொள்ள, இளைய மகளிருடைய மயிர்போல இடுமணலை ஊடறுத்தலையுடைய நீர் ஒழுக, மாமை நிறத்தையுடையவள் திதலை போல மாவீன்ற சிறிது முற்றின தளிரின்மேலே அழகிய இதழை யுடைய பல மலர்களினுடைய வியக்கத்தக்க தாதுகள் உதிர்தலைச்*

(பாடம்) 1. *துறந்துண்ண.*

செய்யப்,* பெருமை பொருந்த இளவேனிற்காலம் வந்துவிட்ட பொழுதின்கண்ணே ;

'ஏர்தர' - எழுச்சிதர. ஐ யென்னும் உரிச்சொல் 'ஐய' வெனப் பெயரெச்சக்குறிப்பாய் நின்றது.

இது தரவு.

(கo - கடு) **சேயார்கட்.........தலைத்தருஉம் :—**

(இ - ள்.) சிலவான சொல்லினையுடையாய்!† சேணிடைப் பிரிந்தோரிடத்தே சென்ற என் நெஞ்சினை ஆற்றுவித்துக் கொண்டிருத்தல் வேண்டுமென்று நீ சொல்லும் எல்லைத்தன்றாக மிகவும் ஆற்றி நிறுப்பேன் ; அதனாற் பெற்றதென்? யான் ஆற்றி நிறுத்தலைக் கைகடக்கும் படியாக வாடைக்காற்று வாய் விரிந்து பனியையேற்றுநின்ற விரவுதலையுடைய பல மலர்களை அளைந்து வந்து பிரிந்தோர்க்கு நோய்செய்தற்குக் காரணமான இளவேனில்நாளின்கண்ணே வருத்தத்தைத் தரும் ;

நீவ வெனத் திரிக்க.

(கச - கஎ) **போழ்துள்ளார்.........யலைத்தருஉம் :—**

(இ - ள்.) விளங்குகின்ற இழையினையுடையாய்! இளவேனிற் காலத்தை நினையாராய் நம்மை மறந்தாரிடத்தே மனம் புரிதலால் என் மேனி வாடுங் கோட்பாட்டினைப் பிறர் அறியலாகாதென்று சூழ்ந்து அப்பொழுதே மறைப்பேன் ; அதனாற் பெற்றதென்? யான் மறைத்த தனைக் கைகடக்கும்படியாக வீழ்கின்ற ஞாயிற்றின் கதிர் அலர்த்தின பூவினது தேனை உண்ணுங் கரிய தும்பியினது யாழோசையை யொத்த முழங்குகின்ற ஓசை நடக்கும் மாலைக்காலம் வந்து வருத்தத்தைத் தரும் ;

'கொண்ட': உவமவுருபு.

(கஅ - உக) **தொடிநிலை.........தலைத்தருஉம் :—**

(இ - ள்.) குற்றம் நீங்குகின்ற வார்த்தையினையுடையாய்! தொடியை நிற்கின்ற நிலையினின்று நெகிழப்பண்ணினாரிடத்தே நின்று தோயும் என்னுடைய அரிய உயிரை அவரிடத்துச் சென்று செறியாமற் காக்கத் துணிவேன் ; அதனாற் பெற்றதென்? யான் அங்ஙனம் துணியவும் வண்டுகள் திறந்து[1] உண்ணும்படியாக நிரைத்த இதழ்கள் அலர்ந்த மணத்தினையுடைய மலர்கள் கமழும் நாற்றம் நெடிய நிலாவையுடைய இராக்காலத்தே வந்து வருத்தத்தைத் தரும்.

இவை மூன்றுந் தாழிசை.

---

* கலி. சo - கக - உo.   † சீவகசிந். கடுடு.

(பாடம்) 1. துறந்து.

(௨௨) **எனவாங்கு:—**

(இ - ள்.) எனச்சொல்லி;

'ஆங்கு': அசை.

இது தனிச்சொல்.

(௨௩ - ௨௬) **வருந்தினை............படர்ந்தே:—**

(இ - ள்.) வருந்தித் தங்கின நின் வளை கழலும்படியாகத் தலைவர் பின் பாராதே அரிய நாட்டிலே பிரிந்திருந்து தேடும் பொருட்பிணியாலே போய்த் திருந்தின எயிறுகள் விளங்குதற்குக் காரணமான நின் தேன்போலும் மொழியை நினைத்து, நம் அரிய துயரைக் களைவாராய் வந்தார்; இனி, நீ வருந்தாதேகொள்.

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது, "நில னொருங்கு மயங்குத லின்று"* எனவே, காலம் மயங்கு மென்றலின், வேனிலும் வாடையும் மாலையும் கங்குலும் வந்தன.

இஃது ஒன்பதடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக் கலிப்பா. (௨௮)

௩௦

அருந்தவம் ஆற்றியார் நுகர்ச்சிபோல் அணிகொள
விரிந்தானாச் சினைதோறூஉம் வேண்டுந்தா தமர்ந்தாடிப்
புரிந்தார்க்கும் வண்டோடு புலம்புதீர்ந் தெவ்வாயும்
இருந்தும்பி இறைகொள எதிரிய வேனிலான்;
துயிலின்றி யாநீந்தத் தொழுவையம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னோ
வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவிற்
குயிலாலும் பொழுதெனக் கூறுந ருளராயின்;

பாணுள்யாம் படர்கூரப் பணையெழி லணைமென்றோள்
மாணோக்கி னவரோடு மறந்தமைகு வான்மன்னோ
ஆனாச்சீர்க் கூடலுள் அரும்பவிழ் நறுமுல்லைத்
தேனார்க்கும் பொழுதெனத் தெளிக்குந ருளராயின்;

உறலியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ

---

* தொல். பொருள்: ௧௨.

கரு. பெறலரும் பொழுதோடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்
தறல்வாரும் வையையென் றறையுந ருளராயின்;

எனவாங்கு,

தணியாநோய் உழந்தானுத் தகையவள் தகைபெற
அணிகிளர் நெடுந்திண்டேர் அயர்மதி பணிபுநின்
உ௦. காமர் கழலடி சேரா
நாமஞ்சால் தெவ்வரின் நடுங்கினள் பெரிதே.

இது பருவ வரவின்கண் ஆற்றாத தலைமகள் இறந்தது சிந்தித்து நம்மாட்டு அன்பிலராயினும் இக்காலத்து இவ்வூரின்கட் பண்டு தாம் விளையாடியவாறு நினைந்து வருவர். இக் கால வரவு சொல்லுவார் உளராயினெனக் கேட்ட பாணன் பாசறைக்கட் சென்று தலைவனைக் கண்டு கூறியது.

(க - ச) அருந்தவ............வேனிலான்:—

(இ - ள்.) செய்தற்கரிய தவங்களைச் செய்தவர்கள் குறைவற நுகரும் நுகர்ச்சிபோல* அழகுகொள்ள அரும்புகள் விரிந்தமையாத கொம்புக டோறுந் தான் விரும்புந் தாதைப் பொருந்தியுண்டு விரும்பி ஆர்க்கும் வண்டோடே கருந்தும்பிகளும் வருத்தந் தீர்ந்து எவ்விடமுந் தங்குதல் கொள்ளும்படி மரங்கள் அவற்றை எதிர்கொண்ட இளவேனிற் கண்ணே;

இது தரவு.

(ரு - அ) துயிலின்றி...........நுளராயின்.—

(இ - ள்.) இக காலம் வெயிலினது ஒளியைக் கண்டறியாத விரிந்த மலரையுடைய குளிர்ந்த பொழிலிலே குயில் கூவுங் காலமென்று அவற்குக் கூறுவார் சிலருளராயின், யாந் துயிலின்றி யாமக்கடலை நீந்தத், தான் மயில்போலும் இயலினையுடைய பரத்தையர் மருவுதலை நுகர்ந்து அவருடனே அழகிய புனலையுடைய மடுக்களையாடி நம்மை மறந்து அவரிடத்தே அமைந்திருப்பன்; அதனுற் பெற்றதென்? கூறுவார் இன்றே;

(கூ - கஉ) பானுள்யாம்...........நுளராயின்:—

(இ - ள்.) இக் காலம் அமையாத புகழையுடைய மதுரையிடத்து அரும்புகள் அவிழ்ந்த நறிய முல்லையிலே தேனினம் ஆரவாரிக்குங் காலமென்று அவற்குத் தெளிவிப்பார் சிலருளராயின், நடுயாமத்தே யாம் வருத்தமிகத் தான் மூங்கிலின் அழகையுடைய அணைபோலும் மெல்லிய தோளையும் மானினது நோக்கம்போலும் நோக்கினையுமுடைய

* பொருந. கூக-கஉஅ. குறள். உகூரு.

பரத்தையருடனே கூடி நம்மை மறந்து அவரிடத்தே அமைந்திருப்பன்; அதனாற் பெற்றதென்? கூறுவார் இன்றே;

(கரு - கரு) உறலியா..........நுளராயின்:—

(இ - ள்.) இக் காலம் பெறுதற்கரிய இளவேனிற் காலத்துடனே பெருமையினையுடைய பூங்கொத்துக்களை யுடைத்தாகிய யாற்றிடைக் குறையைப் புடைசூழ்ந்து வையை அறலுண்டாம்படி ஒழுகுமென்று அவற்குச் சொல்லுவார் உளராயின், தன்னை உறுதற்குரிய யாம் ஒளி கெடும்படியாகக் காமனுக்கு எடுத்த திருநாள் இக்காலத்து வெற்றியை யுடைய இழையினையுடைய பரத்தையருடனே விளையாடுவன்;* அதனாற் பெற்றதென்? கூறுவார் இன்றே;

"சினனே பேதைமை நிம்பிரி நல்குர-வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே"† என்பதனாற் பரத்தையரோடு விளையாடுவானெனப் பொறாமை கூறியும் அவன் ஈண்டையானாக வெனக்[1] காதலைச் சிறப்பித்தலின் அமைந்தது. இவை விளையாட்டிற் பிறந்த உவகை யென்னும் மெய்ப்பாடு; இவை தன்கட் டோன்றிய பெயர்பற்றி வரும்.

இவை மூன்றுந் தாழிசை.

(கஎ) எனவாங்கு:—

(இ - ள்.) எனச் சொல்லி; 'ஆங்கு' : அசை.

இது தனிச்சொல்.

(கஅ - உக) தணியாநோ.........பேரிதே:—

(இ - ள்.) மீளாத காமநோயிலே வருந்தியமையாத தகைமையை யுடையவள் நின்னுடைய விருப்பத்தையுடைய கழல் அணிந்த அடியைப் பணிந்து சேராத அச்சம் அமைந்த பகைவரைப்போலே பெரிது நடுங்கினள்; அவள் அழகைப் பெறும்படி அழகு விளங்கின நெடிய திண்ணிய தேரைச் செலுத்துவாயாக.

இது சுரிதகம்.

"பாசறைப் புலம்பலும்"‡ என்புழித் தூது கண்டு தலைவன் புலம்புவனாதலின், தூதாய்ச் சென்ற பாணன் கூறினான்.

இது "திணைமயக் குறுதலும்"§ என்பதனாற் பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது.

இதனாற் றலைவிக்கு இழிவுந் தலைவற்கு அசைவும் பிறந்தன.

---

* கலி. ௩௫: கரு-கச † தொல். பொருள்: உ௬௫.
‡ தொல். பொருள்: ௪௧. § தொல். பொருள்: கஉ.
(பாடம்) 1. ஈண்டு அடையானாக வெனக்.

இது "மரபின"* என்றதனுன் நான்கடித்தரவிற்கு நான்கடித் தாழிசை வந்து தனிச்சொற் பெற்று நான்கடிச் சுரிதகத்தாலிற்ற ஒத் தாழிசைக் கலிப்பா. (உக)

ஙக

கடும்புனல் கால்பட்டுக் கலுழ்தேறிக் கவின்பெற
நெடுங்கயத் தயலய லயிர்தோன்ற அம்மணல்
வடுத்தூர வரிப்பபோல் ஈங்கைவா டுதிர்புகப்
பிரிந்தவர் நுதல்போலப் பீர்வீயக் காதலர்ப்
புணர்ந்தவர் முகம்போலப் பொய்கைபூப் புதிதீன
மெய்கூர்ந்த பனியோடு மேனின்ற வாடையாற்
கையாறு கடைக்கூட்டக் கலக்குறூஉம் பொழுதுமற்
பொய்யேமேன் ருயிழாய் புணர்ந்தவ ருரைத்ததை;

மயங்கமர் மாறட்டு மண்வேளவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேல் தகைகாண விடுவதோ
பயங்கெழு பல்கதிர் பால்போலும் பொழுதோடு
வயங்கிழை தண்ணென வந்தவிவ் வசைவாடை;

தாள்வலம் படவென்று தகைநன்மா மேல்கொண்டு
வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ
நீள்கழை நிவந்தபூ நிறம்வாடத் தூற்றுபு
தோளதிர் பகஞ்சேரத் துவற்றுமிச் சின்மழை;

பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனும் வனப்பார விடுவதோ
புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் போதிசெய்யா
முகைவெண்பல் நுதிபோர முற்றிய கடும்பனி;

எனவாங்கு,

வாளாதி வயங்கிழாய் வருந்துவ ளிவளென
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மீளிவேல் தானையர் புகுதந்தார்
நீளுயர் கூடல் நெடுங்கொடி யெழவே.

இஃது இளவேனிற் காலத்து வருவல், அத்துணையும் ஆற்றியிருவென்று மண் நசையால் வேந்தன் சென்றவழி, முன்பனிக்காலமும்

* தொல். பொருள்: சசகூ.

பின்பனிக்காலமும் வந்து வருத்தலின் ஆற்ருத தலைவியைத் தோழி வருவரென வற்புறுப்பவும், வன்புறை எதிரழிந்தவழித் தலைவன் யாங் குறித்த பருவம் வருந்துணையும் ஆற்றியிராளெனப் பின்பனிக்காலத்து வருகின்ற வரவுணர்ந்து தோழி கழியுவகை யாற் கூறியது.

(க - அ) கடும்புனல்............நுரைத்தனை :—

(இ - ள்.) யாறு கூதிர்காலத்துப்[1] பெருகுதலிற் கடிதாகிய நீர் வற்றிக் கால்களாக ஓடுதலுண்டாய்க் கலக்கந் தெளிந்து அழகுபெற, நெடிய குளங்களின் அயலே அயலே நுண்மணல் தோன்ற, அம்மண லின் அறல் மறையும்படி கோலஞ்செய்வனபோல ஈங்கையினது வாடற்பூக்காம்பு கழன்று அம் மணலிலே வீழக், கணவரைப் பிரிந்த மகளிர் நுதல்போல முன்பு பூத்த பீர்க்கம்பூ இப்பொழுது பூவின்ருகத் தாங் காதலித்த தலைவரைக் கூடின மகளிர் முகம்போலப் பொய்கை யிற் பூக்குந் தாமரையைப் பொய்கை புதிதாகப் பூக்க, முன்பனிக் காலத்திற்கும் பின்பனிக்காலத்திற்கும் மேலாய் நின்ற இளவேனிற் காலம் ஆயிழாய்! நம்மைக் கூடினவர் தப்பாமல் வருவேமென்று கூறின காலம்; அதனுற் பெற்றதென்? அக் காலம் வருந்துணையும் ஆற்றியிராதபடி முன்பனிக்காலத்து வாடையாலும் மெய் வளைதற்குக் காரணமான பின்பனியாலும் உண்டாகிய வினை ஒழிந்து அயர்தல் இறந்துபாட்டை நமக்குக் கூட்டுகையினுலே நெஞ்சு கலக்கமுரு நின் றது; யான் எங்ஙனம் ஆற்றுவேன்?

முன்னர் நின்ற செயவெனெச்சங்கள் 'மேனின்ற' வென்னும் பெயரெச்சத்தோடு முடிந்து, அது 'பொழு' தென்னும் பெயரோடு முடிந்தது.

கையாறும் ஒரு மெய்ப்பாடென் றுணர்க.

இது தரவு.

(கூ - கஉ) மயங்கமர்............வசைவாடை :—

(இ - ள்.) உலகிற்கு உணவுகளை விளைத்தற்குக் காரணமாகிய மதியின் கதிர்கள் பாலையொத்து விளங்கும் இராப்பொழுதோடே விளங்குகின்ற அணிகள் குளிரும்படியாக வந்த இந்த அசைதலையுடைய வாடைக்காற்று, இரண்டு படையுந் தம்முள் மயங்கின போரிலே மாறு கிய அரசனைக் கொன்று அவன் நாட்டைக் கைக்கொண்டு களிற்றின் மேலே வருமவருடைய வீரத்தாற் பிறந்த அழகை நாங் கண்டு நுகரும் படியாக நம் உயிரைக் கொள்ளாது விடுவதொன்ருய் இருந்ததோ? அது கொண்டே விடும்;

தயங்குதல் - அசைவு.

(பாடம்) 1. கூதிர்க்காலத்துப்.

பால்போழு மென்று பாடமாயிற் பாலை வருத்து மென்க.

இதனுள் வென்ற வீரத்தாற் பிறந்த அழகை நுகர விரும்புதலிற் றலைவியும் அரச வருணமேயாயிற்று. இது மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும். இஃது "ஏவன் மரபின்"* என்னுஞ் சூத்திரத்தா னுணர்க.

(கங - கசு) தாள்வலம்...........சின்மழை :—

(இ - ள்.) நீண்ட கரும்பில் ஓங்கின பூவை நிறங் கெடும்படி காற் றூற் றூற்றித் தோள்கள் குளிரால் நடுங்கி நம் ஆகத்தைச் சேரும்படி துவற்றுகின்ற இச் சிலவாகிய மழை, தமது தாள்களாலே வெற்றியுண் டாம்படி வென்று அழகினையுடைத்தாகிய நல்ல குதிரையை எறி வாளாலே வென்று வருமவருடைய வீரத்தாற் பிறந்த அழகை நாங் கண்டு நுகரும்படியாக நம் உயிரைக் கொள்ளாது விடுவதொன்றாய் இருந்ததோ? அது கொண்டேவிடும்;

இத் தாழிசைகள் இரண்டும் முன்பனிப்பருவங் கழிகின்றன கூறினவாகக் கொள்க.

(கஎ - உ௦) பகைவென்று...........கடும்பனி :—

(இ - ள்.) புகை யென்னும்படி சிறு தூறுகளைச் சூழ்ந்து பூவாய் அழகிய கள்ளைப் பொதிதலைச் செய்யாத முகைபோலும் வெள்ளிய பல்லின் நுனைகள் தம்மிற் பொரும்படி முதிர்ந்த கடிய பனி, பகையை வென்று திறையை வாங்கின பாய்ந்து செல்கின்ற திண்ணிய தேர் மிசை வருமவருடைய கூறுபாடு கொண்ட தலைமையினையுடைய வீரத் தாற் பிறந்த அழகை நாங் கண்டு நுகரும்படியாக நம் உயிரைக் கொள் ளாது விடுவதொன்றாய் இருந்ததோ? அது கொண்டேவிடும்.

இது "பின்பனி தானு முரித்தென மொழிப"† என்றதனாற் பின் பனி வந்தது.

பரித்திண்டேர் எனவும் பாடம்.

இவை மூன்றுந் தாழிசை.

(உக) எனவாங்கு :—

(இ - ள்.) என்று; 'ஆங்கு' : அசை.

இது தனிச்சொல்.

(உஉ - உ௫) வாளாதி...........யேழவே :—

(இ - ள்.) பயனில கூறாதேகொள், விளங்கின இழையினையுடை யாய்! பொய்யன்றித் தாஞ் சொல்லிய நாளெல்லை வருதற்கு இன்னுஞ் சிறிது நாட் செல்லுமென்று தூக்கி, அத்துணையும் ஆற்றாது இவள்

* தொல். பொருள் : உச. † தொல். பொருள் : க௦.

வருந்துவளென்று கருதிக் கூற்றுவனை யொத்த வேற்படையினையுடையவர் புகழ் வளர்கின்ற உயர்ந்த கூடலிலே நெடிய வெற்றிக்கொடிகளைக் கட்டும்படியாகப் புகுந்தார்காண்.

'நிறுத்து' என்றது, தூக்கி யென்னும் பொருட்டு.

"இழவி நிலையே விளையிடத் துரையார் - வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்"* என்பதனுல் உருவு வெளிப்படுதலின் 'இவள்' என்ருன்.

"நில னெருங்கு மயங்குத லின்று"† எனவே, காலம் இரண்டும் மயங்கு மென்றலின் முன்பனியும் பின்பனியும் மயங்கிற்று.

இது சுரிதகம்.

இதனுற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது எட்டடித்தரவும் நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலிப்பா. (கூ0)

## கூஉ

எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற ஐம்பால்போல்
மையற விளங்கிய துவர்மண லதுவது
ஐதாக நெறித்தன்ன அறலவிர் நீளைம்பால்
அணிநகை யிடையிட்ட ஈகையங் கண்ணிபோற்
பிணிநெகி ழலர்வேங்கை விரிந்தபூ நெறிகோளத்[1]
துணிநீரால் தூய்மதி[2] நாளால் அணிபெற
ஈன்றவள் திதலைபோல் ஈர்பெய்யுந் தளிரோடும்
ஆன்றவர் அடக்கம்போல் அலர்ச்செல்லாச்[3] சினையோடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலோடும்
நல்லவர் நுடக்கம்போல் நயம்வந்த கோம்போடும்
உணர்ந்தவர் ஈகைபோல் இணரூழ்த்த மரத்தோடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியோடும்
நயந்தார்க்கோ நல்லைமன் இளவேனில் எம்போல ;

பசந்தவர் பைதனேய் பகையெனத் தணித்துநம்
இன்னுயிர் செய்யு மருந்தாகிப் பின்னிய
காதலர் எயிறேய்க்குந் தண்ணருவி நறுமுல்லைப்
போதாரக் கொள்ளுங் கமழ்குரற் கென்னுந்

---

* தொல். பொருள்: கஅசு. † தொல். பொருள்: கஉ.

(பாடம்) 1. வெறிகொளத். 2. றூமதி. 3. லலர்செல்லா.

தூதுவந் தன்றே தோழி
துயரறு கிளவியோ டயர்ந்தீகம் விருந்தே.

இது காலவரவு கண்டு ஆற்றாளாயினவிடத்துத் தோழி காலத்தை நோக்கி அழகிதாகச் செய்தாய் வந்தெனச் சொல்லித், தலைவிக்கு நங் காதலர் வருகின்றாரெனச் சொல்லி வந்த தூதுகாண் இது, நாம் விருந்தயர்கமெனச் சொல்லியது.

(க - ௫) எஃகிடை...........நெறிகொள:—

(இ - ள்.) கத்திரிகை இடையிலே தீண்டிய, மேகத்தின் கவினைப் பெற்ற, ஐந்து பகுதியையுடைய* மயிர்போலப் புலர்ந்த மணல் மேகம் மழைபெய்யாமற் போகையினாலே நொய்தாகப் பிடித்துவிட்டாற் போன்ற அறுதிவிளங்கின நீண்ட ஐம்பாலிற் பல ஒளிகளையுடைய அணிகளுக்கிடையே இட்டுவைத்த பொன்னாற்செய்த அழகிய கண்ணி போலே அந்த மணலிலே பிணிநெகிழ்ந்த பல பூக்களும் வேங்கை யினது விரிந்த பூக்களும் ஒழுங்குகொள்ள ;

(கத்திரிகை.........பெய்யாமற் போகையினாலே, 'விளங்கின' வென முற்றாக அறுக்க.)

பிற்கூறிய 'நீளம்பா' லென்றதனை முற்கூறிய ஐம்பாலைச் சுட்டின சுட்டுப்பெயராகக் கொள்க.

மணல் ஐம்பால் போல விளங்கின; அவ் ஐம்பாலிற் கிடந்த அணி யும் பொன்மாலையும் போலே அந்த மணலிலே பல நிறத்தையுடைய பூக்களும் வேங்கைப் பூக்களும் ஒழுங்குகொண்டன வென உணர்க.

(௬ - ௧௩) துணிநீராற்...........லெம்போல:—

(இ - ள்.) தெளிந்த நீராலும், தூய மதியையுடைய நாளாலும், புதல்வனை ஈன்றவளுடைய தித்திபோலே நெய்ப்பினை யுண்டாக்கும் மாந்தளிராலும், அறிவான் அமைந்தவர் தங் காரியத்தை முடித்தற்கு அக் காலம் வருந்துணையும் அடங்கியிருக்குமாறு போலக்† காலம் வருந் துணையும் மலர்தலிற் செல்லாத அரும்புகளையுடைய கொம்புகளாலும் வாசிக்க வல்லவரது யாழோசை போல வண்டுகள் ஆரவாரிக்குஞ் சிறு தூறுகளாலும், நல்ல மகளிருடைய கூத்துக் கண்டார்க்கு விருப்பஞ் செய்யுமாறுபோல விருப்பம்வந்த கொம்பாலும், நிலையாமையை உணர்ந்தவருடைய கொடைபோலக்‡ கொத்துக்கள் அலர்ந்து எல்லார்க்கும் பயன்படும் மரத்தாலும், அன்பாற் கூடினவருடைய புல்லுதலைப்போலப் பின்னுதலுற்ற கொடியாலும், பொழில்கள் அழகைப் பெற, இளவேனிலே யாங்கள் எம்மை நயந்தார்க்கு நல்லே

* குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை.

† குறள் . ௪அ௫: ௪௯0. ‡ புறம். ௧அ௯ : எ - அ : நாலடி. ௨௧.

மாயினாற் போல, நீயும் நெறிகொள அணிபெற எப்பொழுதும் வருவை யென்று விரும்பியிருந்தார்க்கு மிகவும் நல்லையோ?

நெறிகொளக் கொடியோடும் அணிபெற வெனக் கூட்டுக.

ஈர்: ஈர்க்கு மரம்.

இளவேனில் எம்போல நயந்தார்க்கு நல்லையோ வென மாறுக.

நீதான் வந்து அழகிதாகச் செய்தாயென இளவேனிலை நோக்கித் தோழி கூறினாள். அதனை நோக்கிக் கூறிய பின்னர்த் தலைவியை நோக்கிக் (கூறுகின்றாள்).

(கச - நக) பசந்தவர்...........விருந்தே :—

(இ - ள்.) தோழி! இவ்விளவேனில் குளிர்ந்த அருவியின் அருகே நின்ற நறிய முல்லையினது மகளிரெயிற்றை யொக்கும் பூக்களை நம்முடைய கமழ்கின்ற கொத்தாகிய மயிருக்கு நிறையக் கொய்துகொண்மினென்று கூறாநிற்கும்; அதுவேயுமன்றி உலகத்திற் பசந்தவருடைய வருத்தத்தையுடைய காமநோயையுந் தனக்குப் பகையென்று கருதிப் போக்கி விசேடித்து நம்முடைய இனிய உயிரை உண்டாக்கும் மருந்துமாய் நாம் துயர்அறுதற்குக் காரணமான வார்த்தையோடே நாம் முயங்கிய காதலருடைய தூதாய் வந்தது; ஆதலால் இனி அக்காலத்திற்கு விருந்தானவற்றை நாஞ் செய்வேம்.

பின்னிய காதலர் தூதென மாறுக. பசந்தவர் நோயைத் தணித்து என்பதனாலும், நம் இன்னுயிரைச் செய்யும் மருந்தாகி என்பதனாலுந் தலைவி காலங் கண்டு வருந்தினமை பெற்றாம். இளவேனிற்கண் வருவலெனக் கூறிப் பிரிந்தவர் தப்பாரென்பதுபற்றி அவர் வார்த்தையோடே தூதாய் வந்ததென்றாள்.

'கொள்ளு' மென்னும் உம்மீறு பன்மையுணர்த்தி முன்னிலையாய் நிற்றல் "இர் ஈர் மின்"* என்பதனுட் கூறினாம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம் பெற்று அடிநிமிர்ந்தோடிய கொச்சகக்கலிப்பா. (௩க)

௩௩

வீறுசான் ஞாலத்து வியலணி காணிய
யாறுகண் விழித்தபோற் கயநந்திக் கவின்பெற
மணிபுரை வயங்கலுள் துப்பெறிந் தவைபோலப்
பிணிவிடு முருக்கிதழ் அணிகயத் துதிர்ந்துகத்
ரு. துணிகயம் நிழல்நோக்கித் துதைபுடன் வண்டார்ப்ப

* தொல். சொல்: உஉச.

மணிபோல அரும்பூழ்த்து மரமெல்லாம் அலர்வேயக்
காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது
தாதவிழ் வேனிலோ வந்தன்று வாரார்நம்
போதெழில் உண்கண் புலம்ப நீத்தவர்;

எரியுரு உறழ இலவ மலரப்
பொரியுரு உறழப் புன்குபூ வுதிரப்
புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்பத்
தமியார்ப் புறத்தெறிந் தெள்ளி முனியவந்
தார்ப்பது போலும் பொழுதெண்ணி அந்நலம்[1]
போர்ப்பது போலும் பசப்பு;

நொந்து, நகுவனபோல் நந்தின கொம்பு; நைந்துள்ளி
யுகுவது போலுமென் னெஞ்சு; எள்ளித்
தொகுபுடன் ஆடுவ போலுமயில்; கையில்
உகுவன போலும் வளை; என்கண்போல்
இகுபறல் வாரும் பருவத்தும் வாரார்
மிகுவது போலுமிந் நோய்;

நரம்பின் தீங்குரல் நிறுக்குங் குழல்போல்
இரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூதத்
தூதவர் விடுதரார்[2] துறப்பார்கொல் நோதக
இருங்குயி லாலு மரோ;

எனவாங்கு,
புரிந்துநீ எள்ளுங் குயிலையும் அவரையும் புலவாதி
நீலித ழுண்கணாய் நெறிகூந்தல் பிணிவிட
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மாலைதாழ் வியன்மார்பர் துனைதந்தார்
காலுறழ் கடுந்திண்டேர் கடவினர் விரைந்தே.

இது பருவவரவின்கண் வன்புறையெதிரழிந்து ஆற்றாளாயினாளைத் தோழி தலைவனது வரவுணர்ந்து கூறி ஆற்றுவித்தது.

(௧ - ௬) **வீறுசான்............நீத்தவர் :—**

(இ - ள்.) தான் விளைவித்தலின்* வேற்றுநாட்டிற்கு இல்லாத வீறமைந்த உலகிடத்து அகற்சியையுடைய அழகைத் தான் காண

* குறள். ௭௩௨.
(பாடம்) 1. பொழுதென் னணிநலம். 2. விடாராய்த்.

வேண்டி யாறு கண்களை விழித்துப் பார்த்தனபோலப் பக்கத்தினின்ற குளங்கள் நீர் நிறைந்து பூக்களால் அழகு பெறப், பளிங்குமணியை[1] யொக்கும் கண்ணடிக்குள்ளே பவழம் அழுந்தப்பட்டவை தோன்றினாற் போல அரும்பவிழ்கின்ற முருக்கினுடைய இதழ்கள் அழகையுடைய குளங்களிலே காம்பினின்றுங் கழன்று வீழத், தெளிந்த குளங்களின் நிழலிலே தம்மையுந் தாம் ஊதும் பூவையுங் கண்டு அவ்விடத்தே நெருங்கி வண்டுகள் சேர ஆரவாரிக்கும்படியாகக் கரையினின்ற மரங் களெல்லாம் அரும்புகள் அலர்ந்து பல மணிகளைச் சூடினாற்போலப் பூக்களைச் சூட, எம்மைப் போலாது காதலையுடைய கணவரைக் கூடின வருடைய அகத்திடுதலையுடைய கையை நெகிழாதே தாதை வீழ்க்கும்[2] இளவேனிலோ வந்தது; பூவினது அழகையுடைய மையுண்கண் வருந்த நம்மைக் கைவிட்டவர் வாராராயினர்;

ஓகாரம் பிரிநிலை.

இது தரவு.

(௧௦ - ௧௫) எரியுரு..........பசப்பு :—

(இ - ள்.) இவ்விளவேனிற்பொழுது நெருப்பின் உருவை யொப்ப இலவம் பூப்பப், பொரியின் உருவை யொப்பப் புன்குகள் பூ உதிரப் புதிய மலர்களையுடைய கோங்கம் பொன்னென்னும்படி தாதை அலர, நாம் வெறுக்கும்படி வந்து தனித்திருப்பாரை அகத்திடாது புறத்தே தள்ளி இகழ்ந்து அலர்தூற்றுங் கொடுமையை யொக்கும்; அது கண்டு பசப்பு எனது அழகையுடைய நலத்தை மறைப்பதுபோல இரா நின்றது;

(௧௬ - ௨௧) நொந்து..........நோய் :—

(இ - ள்.) பிரிந்த மகளிரை நகுதற்கு நங்காலம் வருகின்ற தில்லையே யென்று நொந்திருந்து, அது வந்த பின்னர் நம் வருத்தங் கண்டு சிரிப்பனபோலக் கொம்புகள் பூ மிக்கன; அதனைக் கண்டு என் நெஞ்சம் வருந்தித் தலைவரை நினைந்து அழிவதுபோலே இராநிற்கும்; மயில்கள் நம்மை இகழ்ந்து காலமன்றியுஞ் சேரத் திரண்டு ஆடுவன போலே இராநிற்கும்; நங் கையில் வளைகள் நாங் காப்பவுங் கழல்வன போலே இராநிற்கும்; என் கண் போலே அறுதியையுடைய நீர் இற்று ஒழுகும் இளவேனிற் காலத்துந் தலைவர் வாரார்; ஆதலால், இந்நோய் இனி இந்நிலையினும் மிகுவதுபோல இராநிற்கும்;

(௨௨ - ௨௫) நரம்பின்..........மரோ :—

(இ - ள்.) நரம்பின்[3] இனிய இசையைத் தானத்திலே நிறுத்தும் வங்கியம்போல, ஒலிக்கும் ஓசையையுடைய மிஞிறோடே தும்பி தாதை

(பாடம்) 1. பளிக்குமணியை. 2. யவிழ்க்கும். 3. நரம்பினது.

னூதா நிற்க, நமக்கு நோவு தரும்படி[1]யாகக் கரிய குயில்கள் கூவா நிற்கும்; இவ்வளவிலுந் தலைவர் ஒரு தூதாயினும் வர விடாராய் நம்மைத் துறப்பாரோ, துறவாரோ, கூறாய்;

நம்மை இம்மைப் பிறப்பினுட் டுறப்பார்கொல்லென வாளாதே ஐயஞ் செய்தலின் இஃது ஐயஞ் செய்தல்.

'அரோ': அசை.

இவை தரவின் விகற்பமாகிய தாழிசை.

(உ௬) **எனவாங்கு :—**

'ஆங்கு': அசை.

இது தனிச்சொல்.

(உ௭ - ௩௧) **புரிந்துந்.........விரைந்தே :—**

(இ - ள்.) அது கேட்ட தோழி, என்று,[2] மனம் வேறுபட்டு நீலப்பூப்போலும் மையுண்கண்ணினையுடையாய்! நீ நம்மை இகழுங் குயிலையுந் தலைவரையும் புலவாதேகொள்; தாம் வரும் நாளெல்லையை நம் நெஞ்சிலே நிறுத்திச் சொல்லிய கூற்றுகள் பொய்யல்லவாக மாலை தங்கின அகற்சியையுடைய மார்பினையுடையார் காற்றை யொக்கும் கடிய திண்ணிய தேரை விரைந்து செலுத்தி நமது நெரித்த கூந்தலைப் பின்னின பின்னல் விடும்படி நாம்[3] விரைதலை நமக்குத் தந்தார்காண் என்றாள்;

நீலம், கடைக்குறைந்தது.

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை தோன்றிற்று.

இதனுள், முச்சீரடியும் நாற்சீரடியுமாய் நின்றவாறுணர்தற்கு 'நகுவன' 'புகுவது' 'தொகுபுடன்' 'உகுவன' இகுபற' லெனத் தொடைச்சுவை கொடுத்துக் கூறவே, அவற்றிற்குமுன் நின்றன 'நொந்து' என ஒழியசையாகிய, 'நைந்துள்ளி,' 'எள்ளி,' 'கையில்,' 'என் கண்போல்' என வழியசை புணர்ந்தும் வந்த சொற்சீரடிகளுந், 'தொகுபுட னுடுவபோலு மயில்' என நாற்சீரடியுமாய் வந்தன.

இது தரவுந் தரவின் விகற்பமாகிய தாழிசையும் ஏனை யுறுப்புக் களும் பெற்று வந்த கொச்சகக்கலிப்பா. தரவின் விகற்பமாகிய தாழிசையையுந் தரவின்பாற்படுத்து இதனை இடைநிலைப்பாட்டின்றி வந்த தரவிணைக் கொச்சகக்கலிப்பா என்பாரும் உளர்.

"இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி, னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே"* என்னுஞ் சூத்திரத்துள் இங்ஙனம் வரும் வெள்ளைக் கொச்ச

* தொல். பொருள்: ௩௭௪.

(பாடம்) 1. நோவு தரும்படி. 2. எனது. 3. தாம்.

கத்துள் ஆசிரியவடி சிறிது வரு மென்றலிற் 'பொரியுரு வுறழப் புன்குபூ வுதிர' என ஆசிரியவடி வந்தது. (௩௨)

௩௪

மன்னுயிர் ஏமுற மலர்ஞாலம் புரவீன்று
பன்னீராற் கால்புனல்[1] பரந்தூட்டி இறந்தபின்
சின்னீரான் அறல்வார அகல்யாறு கவின்பெற
முன்ஞேன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்
பின்ஞேன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போற்
பன்மலர் சினையுகச் சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப
இன்னமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினுன் ;

விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பேன்மன் மறைப்பவும்
கரிபோய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
எரிபோத்தி என்னெஞ்சஞ் சுடுமாயின் எவன்செய்கோ ;

பொறைதளர் கொம்பின்மேற் சிதரினம் இறைகொளீ
நிறைதளரா தவர்தீமை மறைப்பேன்மன் மறைப்பவும்
முறைதளர்ந்த மன்னவன்கீழ்க் குடிபோலக் கலங்குபு
பொறைதளர்பு பனிவாருங் கண்ணுயின் எவன்செய்கோ ;

தளையவிழ்பூஞ் சினைச்சுரும் பியாழ்போல இசைப்பவும்
கோலைதளரா தவர்தீமை மறைப்பேன்மன் மறைப்பவும்
கிளையழிய வாழ்பவன் ஆக்கம்போற் புல்லென்று
வளையானு நெகிழ்போடுந் தோளாயின் எவன்செய்கோ ;

எனவாங்கு,
நின்னுள்நோய் நீயுரைத் தலமரல் எல்லாநாம்
எண்ணிய நாள்வரை இறவாது காதலர்
பண்ணிய மாவினர் புகுதந்தார்
கண்ணுறு பூசல் கைகளைந் தாங்கே.

இது பருவங்கண்டு வன்புறையெதிரழிந்து ஆற்றுளாய தலைவிக்குத் தோழி அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

(௧ - ௭) மன்னுயி.........பொழுதினுன் :—

---

(பாடம்) 1. பாய்புனல்.

(இ - ள்.) அகன்ற யாறுகள் அகன்ற உலகிடத்துப் பெருமையை யுடைய உயிர்களெல்லாம் உயிர்வாழும்படி பலவாகிய நீரோடு கால்களாலே தம்மிடத்தே வந்து பரக்கும் நீரைத் தாம் எங்கும் பரந்து ஊட்டிப் பாதுகாத்தலை யுண்டாக்கி அந்நீர் வற்றிய பின்பு சிலவாகிய நீரோடு கால்களாலே அறல் ஒழுக, அவ்வாறுகள் அழகுபெறும்படி யாகத், தமக்கு முன்னே ஓர் உதவியைச் செய்து அவ்வுதவியிலே முழுக்க முயன்றவருடைய கேட்டிடத்தே பின்பு ஓர் உதவியை மீண்டு செய்யும் பெருமையையுடைய தொழிலை ஆளுவாரைப்போலே, சுரும்பு களும் ஒலிக்கப்பட்டு வண்டுகளும் ஆர்க்கும்படியாக, அந்நீரை உண்ட கொம்புகளினின்றும் பல மலர்கள் ஆற்றிலே உகும்படி இனிமை பொருந்தின இளவேனில் வந்துவிட்ட பொழுதின்கண்ணே;

'பன்னீர்', 'சின்னீர்' ஆகுபெயர். இது "தகுதியும் வழக்கும்"* என் னுஞ் சூத்திரத்திற் கூறிய மரூஉ. "வல்லெழுத் தியற்கை யுறழத் தோன்றும்"† என்றதனிற் றோன்று மென்றதனால் அகரங் கெட லகரம் னகரமாய், வருமொழியில் நகரம் "லன வென வரூஉம் புள்ளி முன்னர்த்-த ந வெனவரிற் றனவா கும்மே"‡ என்பதனான் னகரமாய் முடிந்தது.

இது தரவு.

(அ - கக) விரிகாஞ்சித்.........னேவன்செய்கோ :—

(இ - ள்.) அலர்ந்த காஞ்சிப்பூவிற் றாதை அளைந்து கரிய குயில் கள் கூவாநிற்கவும், இக்காலத்தே பிரிந்துறைதற்கு அஞ்சாதவருடைய கொடுமையை யான் மறையாநிற்பேன்; அதனாற் பெற்றதென்? மறைப் பினுஞ் சான்று பொய்த்தவன் வந்து தன் கீழே இருக்கப்பட்ட மரம் போல யான் அழகு கெடும்படி என் நெஞ்சு காமத்தீக் கொளுந்தி என்னைச் சுடுமாயின் யான் அதற்கு என்செய்வேன்?

"புல்லு மரனு மோரறி வினவே - பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே."§ இதனுட் பிற அறிவும் உளவென்று கூறினர்; அதனாற் பாவத்திற்கு அஞ்சி மரங் கவின் வாடிற் றென்றார்.

(கஉ - கரு) போறைதளர்..........னேவன்செய்கோ:—

(இ - ள்.) பூவின் பாரத்தாற் றளர்ந்த கொம்பின்மேலே வண்டி னுடைய திரள் தங்குதல் கொள்ளாநிற்கவும், நிறையெனுங் குணந் தளராதவருடைய கொடுமையை யான் மறையாநிற்பேன்; அதனாற் பெற்றதென்? மறைப்பினும் நாடாளும் முறைமை தளர்ந்த அரசன்கீழ் இருந்த குடிமக்களைப்போலக் கலங்காநின்ற¶ கண்கள் பொறுத்தலாற் றாமல் நீர் ஒழுகுமாயின் யான் அதற்கு என்செய்வேன்?

---

* தொல். சொல்: கஎ. † தொல். எழுத்து: உகரு. ‡ தொல். எழுத்து: கசகூ. § தொல். பொருள்: ௫௮௩ ¶ கலி. ௫: கஉ - கங.

(௧௬ - ௧௯) தளையவிழ்பூஞ்........னெவன்செய்கோ :—

(இ - ள்.) முறுக்கு அவிழ்ந்த பூக்களையுடைய சினையிடத்தே சுரும்பினம் யாழ்போலே ஒலியாநிற்கவுங், கொண்ட கோட்பாட்டினைக் குலையாதவருடைய தீமையை மறையாநிற்பேன்; அதனாற் பெற்ற தென்? மறைப்பினுஞ் சுற்றங் கெட வாழ்பவன் ஆக்கம் பொலிவழியு மாறுபோலப் பொலிவழிந்து தோள்கள் வளைகிடத்த லமையாவாய் நெகிழ்ந்து கழலுமாயின் யான் அதற்கு என்செய்வேன்?

கண் பனிவாருந், தோள் வளையோடு மெனச் சினைவினை முதன் மேல் நின்றது.

இவை மூன்றுந் தாழிசை.

(௨௦) எனவாங்க :—

(இ - ள்.) என்று சொல்லி;

'ஆங்கு' : அசை.

இது தனிச்சொல்.

(௨௧ - ௨௪) நின்னுண்ணேய்........தாங்கே :

(இ - ள்.) நின் நெஞ்சினோய் கூறி நீ[1] சுழலாதேகொள். எடீ! நாம் வருவரென எண்ணியிருந்த நாளெல்லை கடவாமற், கண் உறு கின்ற வருத்தத்தைக் கை நீக்கினாற்போலக் காதலர் சமைத்த மாவினை யுடையராய் வந்தார்காண்;

இது சுரிதகம்.

இதனாற் றலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது எழுசீர்த்த நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலிப்பா. (௩௩)

௩௪

மடியிலான் செல்வம்போல் மரன்நந்த அச்செல்வம்
படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப
மாயவள் மேனிபோல் தளிர்ஈன அம்மேனித்
தாயசு ணங்குபோல் தளிர்மிசைத் தாதுக
மலர்தாய பொழில்நண்ணி மணிநீர்க்[2] கயநிற்ப
அலர்தாய துறைநண்ணி அயிர்வரித் தறல்வார
நனியேள்ளுங் குயில்நோக்கி இனைபுகு நெஞ்சத்தால்
துறந்துள்ளா ரவரேனத் துனிகொள்ளல் எல்லாநீ;

(பாடம்) 1. நின் நெஞ்சினோயை நீ கூறிச். 2. மணிநீர.

